<u>வாழப் பழகுவோம்.</u> (145ம் பக்கம் தொடர்ச்சி)

"வாழ்க்கை என்பது முடிவில்லாத ஓர் அனுபவக் கோர்வை. அனுபவம் என்பது, உடல் மனம் என்ற இரண்டையும் பொறுத்தது. உடல் அனுபவம் மன அனுபவமாகவும்; மன அனுபவம் உடல் அனுபவமாகவும் ஒன்றுக்கு மற்றது உறுதுணையாக மாறி பின்னிக் கொண்டே செல்லும்." +++

"இன்பம் இருவகைப்படும். துன்பத்தை மறந்து வாழும் பெறுகிற இன்பம் ஒன்று; துன்பக் கலப்பற்ற தனி இன்பம் மற்றொன்று." +++

"தொடக்கூறுகளுடனும் சேர்ந்து வந்த அனுபவிப்பதும் ஆண் பெண் வேற்றுமை கருதி ஏற்படுவதில்லை. நமது கவலைக்குக் காரணமான வாழ்வாகும் ஒரு சில வரம்புகளுக்குள் மட்டுமே கிடந்த வேற்றுமை எல்லைகள் வாய்ப்புப் புதைத்து மறைத்து விடுகின்றன; நம்மைய கவலைக்கு இழுத்து, மனத்தை அடக்கப்படுத்துகின்றன. +++

"துன்பம் மரணம்; இன்பம் உயிர்; துன்பம் இருள்; இன்பம் ஒளி; துன்பம் உணர்ச்சி; இன்பம் அறிவு; துன்பம் உழைப்பு; இன்பம் ஓய்வு; துன்பம் சக்தி; இன்பம் சிவன். +++

"திருப்தி என்கிற இன்ப அனுபவம் இல்லாவிட்டால், துன்ப சாகரத்தைக் கடக்க நாம் ஒருபோதும் வல்லமைப் பெறோம். +++

"பொய்யான செயற்கைக் கிளர்ச்சிகளை நம்மில் பலர் இன்பம் என்று நினைத்துக் கொண்டு வாழ்கிறோம். அது இன்பம் அபாயமானதுதான். அதற்காகச் சதா தவித்தும் கேட்டுக் கொண்டே இருக்கும்படி செய்யும் +++

"தாம், ஆசை, சல்லாப, கேளிக்கைகளை அனுபவித்து போகிற வரை நாம் இன்ப ஞானி என்று சொல்லுகிறோம்? அனுபவித்து போன பின் விளைவுகள் என்றே இவைகளை மறக்கிறோம்." +++

"உணர்வில்லாத உடலைப் பிணம் என்கிறோம். உயிரில்லாத உடலைப் பிணம் என்கிறோம். செழிப்பான உடல் செழிப்பான உயிர் – மனம், இவைகள் தான் இன்பத்தின் பலபகைகளைக் கடந்து மெய்யான இன்பம் அடைய செய்யும்." +++

"தான் அனுபவித்த உணர்ச்சியை அப்படியே பிறரும் அனுபவிக்கும்படிச் செய்கிற வெற்றியைக் கலை என்கிறோம். +++

"மனித ஜாதியின் போக்கை நன்றாய் ஆராய்ந்து, தெரிந்து கொள்ள வேண்டும். அதற்கு என்ன செய்ய வேண்டும்? மனிதனையே ஒரு புத்தகமாக நன்றாய் ஆராய்ந்து, நன்றாய் அறிந்து கொள்ள வேண்டும், என்றார் அரிஸ்டாட்டில்." நிறைய படிப்பது மட்டும் போதாது; நிறைய சிந்திப்பது மட்டும் போதாது; எல்லா மனிதர்களோடும் சதா செய்கையில் பழக வேண்டும். நமக்கு வந்த துன்பங்கள் மற்றவர்களுக்கும் வருகின்றன. துன்பம் வந்தபோது மற்றவர்கள் என்ன அனுபவித்தார்கள் எப்படி சமாளித்துக் கொண்டார்கள், என்று தெரிந்து கொண்டால் நமக்கு பெரிய பல வழிகள் தெரியும். +++